பரிக்கரி யிரதங் காலாள் பரந்தன தொடர்ந்து செல்ல
விரிகுடை நிழற்றிச் செல்ல விளங்குசா மரைக டுள்ள
வரிகருங் கழற்கான் மன்னன் வாம்பரி யுகைத்துச் சென்று
தெரிவரும் பெருமான் மேய திருக்கோயி லூருட் புக்கான். (௩எ)

இனையவ னின்ன னாக விணர்ப்பொழிற் புத்தூ ரம்மான்
றனைவிடை கொண்டெ ழுந்து தணப்பருங் கான நீங்கிப்
புனைமலர்ப் பொய்கை சூழக் கோயிலூ ரகத்துப் புக்கார்
கனைகுரன் மேக மென்னக் கவிமழை பொழிவார் யாரும். (௩அ)

சங்கவான் புலவ ரெல்லாம் வந்தமை சாற்றக் கேட்டுத்
துங்கமாம் புணரி மேவத் துனைந்துசெல் குடிமை யேபோ
லங்கவ ரிருக்கை நேடி யடைந்தனன் றொழுது நின்றான்
மங்கலம் பொலியுஞ் சூளை வளநகர் புரக்கு மன்னன். (௩௯)

சிலரிவன் சூளை யாளுஞ் செல்வனென் றவருக் கோத
வலர்புக ழனையா ரங்கை குவித்தெழுந் தவாவிப் புல்லி
நலர்தொழு நின்னைக் காண்பா னாங்கள்வந் தனங்கா ணென்றா
ருலர்தலி னும்மைக் காண்பா னுற்றனன் யானு மென்றான். (௪0)

இருதிறத் தாரு மிவ்வா றளவளா யெழுந்து போந்து
மருமலர் பூத்த தெய்வ வளமதுப் பொய்கை மூழ்கி
நிருமல வடிவி னன்ற நெல்லைநா யகிபொற் றாளுங்
குருமலி பிறைசான் மோலிக் கொற்றவா ளீசர் தாளும். (௪௧)

அன்புறப் பணிந்து போற்றி யாரரு ணிரம்பப் பெற்றுப்
பின்பிரு திறத்தி னாரும் பெரிதள வளாவிப் பேசி
யென்புலப் பரிய பூணைக் கொண்டவ ரினிது மேவு
நன்புலச் சூளை புக்கார் நகுமுகத் தினராய் மாதோ. (௪௨)

முழுகினர் பாவ மெல்லா முருக்கிவாய்ப் பெய்வ தாய
வொழுகொளிக் கதிரோன் றீர்த்த முறைத்தநூல் விதியான் மூழ்கி
வழுவறு தெய்வ நீறும் வயங்குகண் மணியும் பூண்டு
செழுவிய வெழுத்தோ ரைந்துஞ் சிந்தையிற் றிருந்த வெண்ணி. ()

இண்டையரு வண்டு பொங்க விருகையுந் தலைமேற் கூப்பி
நடையரு வறவோர் சூழ நல்லகாய் கனிபூ வோடு

மடையறு வதரி நீழ லமர்ந்தபார்ப் பதிம ணாளன்
கொடையுருக் கோயில் சார்ந்து கோபுர முன்பு தாழ்ந்தார். (௪௪)

விழிகணீ ரருவி பாய மென்கரந் தலைமேற் கூம்ப
வொழிதரா வன்பு பொங்க வுட்புகுந் துவப்பிற் சூழ்ந்து
பழிபடு மலங்கண் மூன்றும் பாழ்பட வின்பம் பொங்க
வழிமது நறும்பூங் கொன்றை மாலையான் றிருமுன் சென்றார். ()

கண்டனர் மாய னாதிக் கடவுளர் காணாத் தேவை
விண்டனர் கவலை யெல்லா மேனிமேற் புளகப் போர்வை
கொண்டனர் நெஞ்ச நெக்குக் குழைந்தனர் கண்ணீர் வார
வண்டர்தம் பிரானார் காட்சி யழகிய தென்று நின்றார். (௪௬)

முழுதுண ராதி சைவ முனிவர னொருவன் போந்து
பழுதறு வில்வங் கொண்டு பற்பல பெயருங் கூறித்
தொழுதகு தாளிற் சாத்தித் தூநிவே தனமுஞ் செய்து
கெழுதகு பளிதத் தீபங் கிளர்தரச் சுழற்றிப் பின்னர். (௪௭)

இலகுவெண் ணீறு நல்க வெண்ணரும் விருப்பி னேற்றுத்
திலகநன் னுதலிற் பூசித திருத்தகத் தொழுது பின்ன
ரலகில்பே ரருளான் மிக்க வம்மைசந் நிதியும் போந்து
குலவுபோற் றுவந்து நீறு கொண்டுபே ரின்ப முற்றார். (௪௮)

நண்ணிய புலவர் யார்க்கு நலமலி வசதி நல்கிக்
கண்ணிய வமுதுங் குய்சால் கறிகளுஞ் சிற்று ணாவு
மெண்ணிய நெய்யும் பாலு மின்னுமுள் ளனவுங் கொண்டு
புண்ணிய மன்னர் மன்னன் பொலிதர வூட்டி னானே. (௪௯)

கப்புரங் கலந்த சாந்தக் கமழ்நறுஞ் சேறு பூசி
வெப்பமுற் றொழியச் செய்த விரைநறு நீரிற் றோய்த்த
வொப்பில்பூ மாலை சூட்டி யொருங்குபல் வாசங் கூட்டுந்
திப்பிய விலைகாய் நல்கிச் செய்தனன் மகிழ்ச்சி மேன்மேல். (௫௦)

மெல்லிழைக் கலிங்கம் பொன்செய் மென்றுகி றலைச்சாத் தாதி
நல்லிழைத் துகில்கண் மற்று நகுகதிர் மதாணி யாழி
யெல்லிழைத் தெடுத்த தாய குழைமுத லெல்லாப் பூணுங்
கல்லிழைத் தமைத்த மற்றுங் கவின்பெற நல்கி னானே. ()

காவலன் முகமன் கண்டு கயற்கொடி யுயர்த்த செங்கை
மாவல னுய செங்கோல் வழுதியை மறந்தார் கொன்றைப்
பூவலர் வேணிப் பெம்மான் றரிசனப் பொலிவு கண்டு
நாவல ராலவாயி னம்பனை மறந்தா ரன்றே. (௫௨)

காலத்திற் சிவபி ரானைக் கண்டிறைஞ் சுதலுங் கொண்ட
சீலத்திற் றத்தம் பூசை செய்தலும் புனித மாய
கோலத்தி னமைந்த நல்லூண் கோடலுங் கலைகள் யாவு
மூலத்தி னுணையின் மன்னோ டாய்தலு முயன்றி ருந்தார். (௫௩)

பன்னாளிவ் வாறு செல்லப் பாவல ருறுநா ளோர்நாட்
பொன்னன மணிமா டஞ்சூழ் பொங்கெழி லால வாயின்
மின்னார்செஞ் சடில மோலி விமலனார் தமைநி னைந்தா
ரெந்நாள்சென் றிறைஞ்சு வோநம் மிறைவனை யென்று நைவார்.

அங்கயற் கண்ணி யோடு மாலவா யமர்ந்த மூர்த்தி
பங்கயப் பாத மென்று பணிவது கனக கஞ்சக்
கொங்கலர் வாவி யென்று குடைவது பன்னா ளிங்கே
தங்கின மென்று நெஞ்சந் தளர்ந்துநெக் குருகு வாரால். (௫௫)

வேறு.

வெருவால மெழுதலொடு மெய்ந்நடுங்கி யயனெடுமான்
மருவால நிழலமர்ந்தாய் மாற்றுகென விதுநமக்குச்
சருவாலென் றெடுத்தயின்ற தாவாத பெருங்கருணை
திருவால வாயுடையான் சேவடிகண் மறந்தனமால். (௫௬)

வெருக்கூடும் படியெழுந்து விரிந்தபுவ னம்புவன
வுருக்கூடு குலைப்பதுதேர்ந் தும்பரெலா மோலமிட
மருக்கூடு செஞ்சடைமேல் வாங்கியமைத் துலகளித்த
திருக்கூட லுடையபிரான் சேவடிகண் மறந்தனமால். (௫௭)

பொருமியழு மொருபாலன் பொருட்டாக வருள்கூர்ந்தே
யுருமதிர வதிர்த்துமுழங் கொருகடாப் பக்குகைத்து
வருமறலி யுயிர்மாள மலரடிசற் றேயெடுத்த
திருமதுரா புரிப்பெருமான் சேவடிகண் மறந்தனமால். (௫௮)

ஒழுங்குபட வண்டிமிழீஇ யுறுசுவைய கழைகோட்டி
யெழுங்குறிசின் மலர்க்கணைதொட் டெய்யுமுனை யெழிலிரதி
யழுங்கும்வகை யவனவிய வழல்விழிசற் றேதிறந்த
செழுங்கடம்பி னடிப்பெருமான் சேவடிகண் மறந்தனமால். (௫௯)

பொருத்தமுற்ற மூழ்குநர்தம் பொல்லாங்கு முழுதொழித்துக்
கருத்தலர்த்தி மலமாயை கன்மமிரி தரப்போக்கி
யிருத்திமிகு பேரின்ப மருளொருபொற் றாமரைநீர்த்
திருத்தலத்து மூர்த்தபிரான் சேவடிகண் மறந்தனமால். (௬௦)

இந்திரனூர் பழிகழுவி வெள்ளானை யிபபுவிநீத்
தந்தரநா டுறவருளி யணிநகரந் தகக்கண்டு
சுந்தரபொற் றடாதகையார் தோற்றவருள் புரிந்தமருஞ்
செந்தளிர்மே னிபபெருமான் சேவடிகண் மறந்தனமால் (௬௧)

தாவாத பேரழகிற் றடாதகையை மணந்தமர
ராவாவென் றேத்தவெள்ளி யம்பலத்திற் கூத்தாடி
யோவாத பெருமைசா லொருகுறளுக் கன்னமிட்ட
தேவாதி தேவனிரு சேவடிகண் மறந்தனமால். (௬௨)

கூவொலிசெய் குறட்கன்னக் குழியொடுவை யையுமழைத்துப்
பாவொலிசெ யெழுகடலும் பாண்டியனும் வரக்கூவி
யேவொலிசெய் தனுவாங்கு முக்கிரனை யருள்புரிந்த
சேவொலிசெய் கொடிப்பெருமான் சேவடிகண் மறந்தனமால். ()

மைந்தனுக்கு வேல்வளைசெண் டுதவிவா ரிதிசுவற
விந்திரன்பொன் முடிதகர வளைகுலைய வெய்துவித்துச்
சந்தமறைப் பொருளுரைத்து மணிபகர்ந்து தழைந்தடியார்
சிந்தையிடத் தமர்பெருமான் சேவடிகண் மறந்தனமால். (௬௪)

வருணன்விடு கடல்சுவற்றி வளநகர்மேன் முகிலேவிப்
பொருவருசித் தாய்க்கரும்பு கல்லானை வாய்ப்புகட்டி
வெருவுருவே ழந்தடிந்து விருத்தனு தியராய
திருவளர்பே ரருட்பெருமான் சேவடிகண் மறந்தனமால். (௬௫)

மாறிநட்டம் புரிந்துபழி யஞ்சிமா பாதகந்தீர்த்
தேறியமா ரங்கமரிந் தெயிற்றுவிட நாகமொடு

சிறியமா யப்பசுவைத் தீர்த்துமெய்க்காட் டிட்டமருஞ்
சேறிகழ்கட் பனைபாகன் சேவடிகண் மறந்தனமால். (சுசு)

கிழியருளி வனேவிற்றெண் சித்திகளுங் கிளர்வித்துப்
பழியில்விடைக் குறிபொறித்துத் தண்ணீர்ப்பந் தரும்வைத்து
மொழியிரத வாதஞ்செய் தாரருளே முகிழ்ப்பவமர்
செழியர்குலக் கொழுந்தினிரு சேவடிகண் மறந்தனமால். (சுஎ)

ஒருவளவன் றனைமடுவிற் புகுத்தியுல வாக்கோட்டை
யருளியருண் மாதுலனுய்ச் சிவலோக மதிதெரித்துப்
பெருவிறகு சுமந்துதிரு முகங்கொடுத்துப் பெரும்பலகை
திருவுறவிட் டருள்பெருமான் சேவடிகண் மறந்தனமால். (சுஅ)

இசைவாது வென்றுகுழ வெறுழிக்கட்கு முலைகொடுத்தாங்
கசையாமந் திரராக்கிக் கரிக்குருவி யமர்நாரை
வசைதீர வருளியரா வனேந்துணர்த்த வருள்புரிந்த
திசையாடை யுடையபிரான் சேவடிகண் மறந்தனமால். (சுகூ)

தன்னுடைப்பே ரம்பெய்து தந்துநகக் குப்பலகை
மின்னுடைப்பொற் கிழியளித்து வெகுள்கீரற் கரையேற்றிக்
கொன்னுடைய விலக்கணமுங் கொளுத்தியுறு கலாந்தீர்த்த
தென்னுடைய தென்னவன்பொற் சேவடிகண் மறந்தனமால். (எ0)

முகம்புலர்ந்த விடைக்காடன் முற்றுவகை கொளவருளிச்
சகம்பயந்த தாயான கயற்கண்ணு டன்னேடு
மிகம்புகழ்ந்து கொண்டாடு மிந்திரமா னத்தமருந்
திகழ்ந்தவருட் பெருமான்பொற் சேவடிகண் மறந்தனமால். (எக)

என்றுகனிந் துள்ளுருகி யிவ்வாறு புலவரெலா
நன்றுமத னையடைவோ நானேநா மென்றிருந்தார்
வென்றுமிளிர் மன்னவனு மிவர்போலும் விருப்புற்று
னன்றுகன விடைச்சூலை யமலரெழுந் தருள்செய்வார். (எஉ)

ஆலவா யிடைக்காணு மழகியநந் திருக்கோலஞ்
சாலநீ ரிவ்விடத்தே தரிசிப்பா னருள்செய்வோங்
கோலமார் தருகடம்புங் குளிர்பொற்று மரைத்தடமுஞ்
சீலமார் செய்கையுளீர் சிறந்தசான் றதற்குணர்வீர். (எங)

அந்தமா தலத்தினுமித் தலத்தினதி விருப்பமுளோ
மெந்தமர் தலங்களுமித் தலமொவ்வா வெனத்தெளிமின்
சுந்தரே சுரரெனும்பேர் சொல்கவின்று முதன்மக்குக்
கந்தமார் குழற்குழைப்பிர் கயற்கணு ளெனுநாமம். (எச)

திருவிழா முதலாய சிறப்பெல்லா மத்தலம்போற்
குருவிழா வகைநடத்திக் கொடுவாரு மென்றியம்பிப்
பெருவிழா விருதிறத்துப் பெரியோர்க்கு மருள்புரிந்து
மருவிழா மலர்க்கொன்றை மாலையா ருருக்கரந்தார். (எரு)

விழித்தனர்க ணிருதிறத்து மேலோரு முளக்கவலை
யொழித்தனர்தங் கனவிலையை யொருவரொரு வரிற்பேசிக்
கொழித்தனர்பே ரருளிருந்த படியென்னே யெனக்கூறிச்
செழித்தனர்மா மதுரைநகர்ச் செலவொழிந்தார் விடிவுணரார். ()

விடியலுணர்ந் தெழுந்தொருகை வெஞ்சூலப் படையாளி
கடிமதிற்கோ யிலையடுத்தார் கனகதா மரைமூழ்கி
வடிமதுவாய் வைத்தருந்தி வண்டுபா டிசையுடைத்தாய்
முடிவிலொரு பெருந்தீர்த்த முன்பொலியக் கண்டனரால். (எஎ)

தென்னல்வரை யில்லாத நிறைதருநீ ரிப்பொய்கை
யின்னலற வாலயமுன் னிருந்தவா றென்னென்பார்
பன்னரிய புகழ்ப்பரமன் பகர்ந்தபடி யேயிருப்ப
தென்னவதி சயமென்பா ரியம்பரிதித் திறமென்பார். (எஅ)

ஆனந்த மூழ்குநர்போ லத்தீர்த்தப் புனன்மூழ்கி
யானந்த வெண்ணீறு மக்குமணி யும்புனைந்தே
யானந்த மயமான வைந்தெழுத்து மனத்தெண்ணி
யானந்தர் தளிபுகுவார் மறமொன்று மறிதரற்கே. (எகூ)

நெடியகோ புரமுன்பு நிலநிறந்தோய் தரப்பணிந்து
கடியமதில் புடையுடுத்த கனகதளி யுட்புகுந்து
பொடியணிமே னியர்பிரதக் கணம்புரியும் பொழுதொருபால்
வடியலர்துன் றியகடம்பு வயங்குபுகிற் பதுகண்டார். (அ0)

கண்டவுடன் றொழுதெழுந்தார் காமருவும் பூந்தருவைத
தண்டருமன் புறக்கட்டித் தழுவினார் நெட்டுயிர்த்தார்

மண்டனில்வீழ் மலரெல்லாம் வாரிவிழி யொடுசேர்த்தா
ரண்டர்பிரான் திருவருண்மற் றளப்பரிய தாமென்றார். (அக)

சொல்லரிய வன்பகத்தே தீளும்பவிறை யவன்றிருமுன்
வெல்லரிய மகிழ்ச்சியொடு மேவினார் பணிந்தெழுந்தார்
கல்லரிய மலக்கிழங்கு கழிந்ததுபோ யொழிந்தென்றார்
புல்லரிய துதியெடுத்துப் புகழ்ந்துபா டுவாரானார். (அஉ)

மாலாத மனத்தொளியாய் வயங்குமொரு பேரொளியே
யேலாத கொடுந்திரிவார்க் கெஞ்ஞான்று மொளிப்பவனே
சூலாத மலக்கிழங்கு சூன்றெடுக்கும் பெருவலியோய்
தோலாத பெருங்கருணைச் சுந்தரரே சுரசரணம். (அங)

மலமாயை கன்மமெனு மாசுமூ டிடீவடியோ
நலமாய பேருணர்விற் றலைபட்டு நயமுணர்வா
னிலமாய தேரேறி நெடும்புரமூன் றெரித்திடும
துலமாய பேருருள்செய் சுந்தரரே சுரசரணம். (அச)

ஒல்லாத பிறவியடைந் திருவினைக்கே யுடம்பட்டுக்
கல்லாத கொடியேமாய்க் கசட்டறிவின் மூழ்காமல்
வெல்லாத மெய்ஞ்ஞான வெளிமருவ வளாவிட்டுச்
சொல்லாத பேரருள்செய் சுந்தரரே சுரசரணம். (அரு)

காற்றியொரு மலமூன்றுங் கழலடைதற் கொல்லாத
வாற்றியிறப் பொடுபிறப்பு மடைவேங்கள் கரிசனைத்து
நீற்றியரு ளுதற்பொருட்டு நீர்த்தடமுஞ் சீர்க்கடம்புந்
தோற்றியரு ளியபெருமைச் சுந்தரரே சுரசரணம். (அசு)

ஒன்றாகிப் பலவாகி யுருவாகி யருவாகி
யன்றாகி யின்றாகி யருளாகி மருளாகி
நன்றாகித் தீதாகி நான்மறைச்சென் னியுமளவாத்
தொன்றாகிப் புதிதாய சுந்தரரே சுரசரணம். (அஎ)

என்றுபல வாறுதுதித் தெம்பிரான் பெருங்கருணை
யொன்றுமளப் பரிதாலென் றொழியாத வின்புற்று
நன்றுமது ராபுரியி னுங்காணுங் கோலமே
யின்றிவர்தந் திருக்கோல மென்றுதொழு தெழுந்துபோய். (அஅ)

பல்லுயிரு மினிதீன்ற பார்ப்பதியா லயமடைந்தார்
செல்லுலவு பொழின்மதுரைத் திருக்கோயில் வீற்றிருக்கு
மெல்லுலவாப் பெருங்காட்சி யியைந்தவனும் வீற்றிருந்தா
ளல்லுலவாக் கண்டத்தா ரடைந்தவடி வினுக்கேற்ப. (அகூ)

புயல்புரையொண் கருங்குழலும் பூரணசந்திரமுகமு
முயல்புரையா ருயிருமுற வொளிரிருசீ றடியுமயி
லியல்புரைசா யலும்வனப்பு மிலவுபுரை கனிவாயுங்
கயல்புரைகண் களும்பிறவுங் கண்களிப்பக் கண்டார்கள். (கூ0)

மயற்கண்ணுள் வழிபாடு மருந்துபுரி யன்பினர்பா
லயற்கண்ணு ளலளாகி யளப்பரிய பேரின்பச்
செயற்கண்ணு டொறும்பருகத் தீராது பெருகுவிக்குங்
கயற்கண்ணு டிருவுருவுங் கண்டுதொழு தின்புற்றார். (கூக)

பொன்னியலு மணைத்தடமும் பூப்பொலியு மொருகடம்பு
மின்னியல்செஞ் சடையார்தம் விளங்கருளாற் றோன்றினமை
மன்னியல்பி னெத்தலத்து வாழ்வாருந் தெரிந்துவகை
துன்னியல்பிற் சூழையுற்றுத் தரிசித்துத் தொழன்முயன்றார். (கூஉ)

மாமதுரா புரியகத்து வாழ்வாரு மிதுகேட்டுக்
காமருமின் சூழைநகர் கலந்திரண்டுங் கண்ணுற்றுத்
தாமருஞ் சடையிருவர் தமைப்போற்றி யிருதிறத்து
நாமகள்சால் வாழ்க்கையர்க டமையுநயந் தேத்துவரர். (கூங)

மண்ணவர்க ளிவ்வாறு மாறாது களிப்படைய
விண்ணவர்கள் கற்பகத்தின் மேவுபூ மழைபொழிந்து
கண்ணவர்க ளாயினர் கரிசமைமுக் குறும்பெறிந்தே
பண்ணவாகண் மிகவுவந்து பரவுவார் பண்பமைய. (கூச)

துன்றுபெருங் கருணையுடைச் சுந்தரரே சுரரென்றுங்
கன்றுதலி லாதருளங் கயற்கண்மட மாதென்று
மன்றமுத லிருவருக்கு மாகியவித் திருநாம
மென்றுமிவை யுரைப்பவர்க ளெண்ணியவெ லாமடைவார். (கூரு)

மன்னியபொற் றாமரைநீர் வகுத்தவிதிப் படியாடித்
துன்னியவண் பெருங்கருணைச் சுந்தரநா தன்பதமு

மின்னியவங் கயற்கண்ணுமை மென்பதமுந் திசிப்போர்
பன்னியவிப் புவியாண்டு பண்ணவராய் வீற்றிருவார். (கூசு)

எண்ணரிய பெருமகிழ்ச்சி யெய்தியமற் றிருவோருங்
கண்ணரிய சுந்தரனைக் கயற்கண்ணுமை யைப்போற்றிப்
பண்ணரிய தொழில்வாய்ந்து பரவியதம் மிடம்புகுந்தார்,
நண்ணரிய கிழமையுறு நட்பின்மிகக் கலந்தம்மா. (கூஎ)

நன்றுபொலி தருமொருநா ளுவலர்கண் மிகமகிழ்வுற்
றன்றிவனே யாயினக்கா லெம்பதுபோர் சங்கத்தா
ரென்றுசொலும் படியாமே யென்றுபுனைந் திருஞ்சூளை
யொன்றுவிச யாலயனைப் பாடினரொரு வெண்பா. (கூஅ)

புரடியவெண் பாக்கேட்ட பார்த்திபனு மிகமகிழ்ந்து
கூடியவன் புறவெழுந்து கும்பிட்டுக் கூத்தாடி
நாடியவான் பெரும்புலவீர் நான்றரமோ விதற்கென்று
நீடியபல் லுபசார சிறப்பினு னவர்மகிழ. (கூகூ)

ஆவணிமூ லத்திருநா ளழகியசித் திரைத்திருநா
ளாவணிதைப் பூசமென நவிலாடிப் பூரமெனப்
பாவணிநற் பெருந்திருநாள் பரவுறுமற் றைத்திருநாண்
மாவணியிற் சிறப்பித்துச் சுந்தரற்கு வயக்கினன். (க00)

இனையசிறப் பிற்பலநா ளிவ்வாறு பணிசெய்து
நனையநறு மலர்ப்பைந்தார் நயந்தவிச யாலயனு
மினையவரும் புலவர்களு நிறைகருணைச் சுந்தரர்தம்
புனையவரு மலரடிக்கீழ்ப் புக்களவா வின்புற்றார். (க0க)

சங்கப்புலவர் பூசித்தபடலம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் ௬அ௬.

---

# திருமால்பூசித்த படலம்.



எங்கு மாகி யிலங்குஞ் சிவபிரான்
பொங்கு பேரரு ளாற்புர வுற்றவன்
சங்கு சக்கரந் தாங்குந் தடக்கையான்
கொங்கு தங்குந் துழாயணி கொண்டலே. (௧)

வெய்ய தானவர் வீறு குலைக்கவுஞ்
செய்ய வானவர் செய்கை நிரப்பவு
மைய நெஞ்சுட் குறித்தருள் வாங்குவான்
மையகன்ற வளத்தலந் தேருவான். (௨)

வீளை வாய்த்துயின் மேவி நறுந்துழாய்த்
தாளை யாதரிக் குந்தடந் தோளினன்
காளை மேற்கொண் டிலங்குங் கரும்பொழிற்
சூளை மாநகர் துன்னின னென்பவே. (௩)

எண்ணு மாறெழில் சார்திருக் கோயிலு
நண்ணு பொற்றா மரைநறுந் தீர்த்தமுங்
கண்ணு தெய்வக் கடம்பும் வதரியு
மண்ணு மேன்மை யனைத்துந் தெரிந்தனன். (௪)

மேலு மேலும் விருப்பம் வளர்ந்தெழச்
சாலும் பொற்றா மரைத்தடந் தோய்ந்தனன்
கோலும் வெள்ளிய நீறுங் குரூஉச்சுட
ராலுங் கண்மணி யும்மணிந் தானரோ (௫)

நந்து வன்னமோ ரைந்து நவிற்றினன்
வந்து கோபுர வாயிலிற் றாழ்ந்தனன்
சிந்து தீவினை யேனெனச் சிந்தைசெய்
துந்து கோயிலி னுட்புகுந் தானரோ. (௬)

முந்தி மூன்று வலஞ்செய்து மொய்கழ
னந்தி பாற்சென்ற னன்விடை பெற்றன

னந்தி வண்ணத் தமலன்முன் சென்றனை
னுந்தி பூத்தவ னென்னு மொருவனே. (௭)

மன்னு பொற்று மனைப்புன லாட்டினன்
மின்னு சாந்தம் விரவமெய் கூட்டினன்
றுன்னு பன்மலர் வில்வமுஞ் சூட்டினன்
முன்னு வாச முழுப்புகை கோட்டினன். (அ)

உற்ற மேன்மை யமுதமு மூட்டினன்
முற்ற மற்றை முகமனுஞ் செய்தபின்
செற்ற மோவு திருமுன் குடந்தமுற்
றற்ற நீங்க வறைவன் றுதியரோ. (௯)

கால காலமுக் காலமுந் தீர்ந்தவ
சூல மேந்திச் சுடர்திருப் பாணிய
வால மாந்து மருட்பெருஞ் சேவக
பால லோசன நின்னடி பற்றினேன். (க0)

முழுது மோர்ந்த பவமுழு தாயவ
கழுது சால்பெருங் காட்டி னடிபபவ
பழுது தீரப் பரந்தநின் சேவடி
தொழுது வேண்டித் துதிப்ப னடியனேன். (கக)

முத்த னேமுதல் வாமுழு மாதவர்
சித்த னேசிவ னேசெஞ் சடையணி
மத்த னேவத ரித்தரு ணீழல்வா
ழத்த னேயடி யேனுன் னடைக்கலம். (கஉ)

கண்ண லேது மிலேனுன் கழலன்றிப்
பண்ண லேது மிலேனுன் பணியன்றி
நண்ண லேது மிலேனுன் னலனன்றி
யண்ண லேயடி யேனுன் னடைக்கலம். (கங)

போற்றி லேனின் பொலங்கழ னின்பணி
யேற்றி லேனின் னெழுத்தைந் தினையுமுட்
சாற்றி லேனத னற்கொடுந் தானவர்க்
காற்றி லேனடி யேனுன் னடைக்கலம். (கச)

என்று தோத்திரஞ் செய்திறைஞ் சிப்பெயர்ந்
தொன்று சேற்க ணுமையவண் முன்செலீஇ
நன்று போற்றி நறுமலர் தூய்ப்பணிந்
தன்று மாயவன் பின்னரிஃ தாற்றினான். (கசு)

நாய கன்றளித் தென்றிசை நண்ணிமே
சேய மேனிச் சிவலிங்க மொன்றனைப்
பாய வன்பிற் பதிட்டை புரிந்தன
னைய தீர்த்தமொன் றுவயிற் றொட்டனன். (கஎ)

விண்டு போக வினைதன் பெயரினால்
விண்டு வீசன் மிகப்பொலி வெய்திடும்
விண்டு தீர்த்த மெனப்பெயர் விண்டனன்
விண்டு பூசனை யாற்றுதன் மேயினான். (கஅ)

அன்ன தீர்த்த முகந்தினி தாட்டிபு
பன்ன மோடு பலமல ருங்கொடு
முன்ன வன்றிருப் பூசை முடித்தனன்
சொன்ன வாடை யுடுத்திய தூயனே (கக)

இந்த வாறுபன் னாளங் கினிதிருந்
தந்த மில்லா வருந்தவ மாற்றுழிக்
கந்த வோதிக் கயற்க ணுமையொடு
முந்த வந்தனன் முக்கண் முதல்வனே. (கஎ)

ஐயன் காட்சி கொடுத்த தறிந்துகார்
மெய்யன் போற்றி விரும்பி யெதிர்நின்றான்
செய்ய நின்றவச் செய்கை யுவந்தன
மைய னீங்கு வரம்பல கொள்ளென்றான். (உ0)

வெய்ய தானவர் வெவ்வினை வீட்டவுஞ்
செய்ய வானவர் செய்வினை நாட்டவு
மைய னேயடி யேற்கு வரமருண்
மெய்ய வின்னுமொர் விண்ணப்ப முண்டரோ. (உக)

இந்த மாதலத் தெய்தி யடியனேன்
சந்த மாரப் பதிட்டைசெய் சம்புவை

நந்த வாவு நறும்புனற் பொய்கையை
முந்த வாதரிப் பாரெண்ண முற்றுக. (உஉ)

அன்ன தூய சிவலிங்கத் தையநீ
பின்ன மின்றிப் பிறங்கி யமருக
வின்ன மாதலத் தேயடி நாயினேன்
மன்ன வேண்டும் வழங்குதி யாலென்றான். (உ௩)

என்று வேண்ட லுமீத்து நமக்குநீ
யொன்று மேற்றிசை வைகுதி யுன்பெயர்
நன்று கண்ணிறைந் தானென்பர் ஞாலத்தார்
கன்று கொண்டு கனியுகுத் தாயினும். (உச)

உன்னை யேத்துந ருன்பத மேய்துக
பின்னை கேள்வ பிறங்குநீ பூசித்த
வென்னை யேத்துந ரென்னை யுறுகவென்
றன்னை யோடு மறைந்தன னையனே. (உ௫)

சென்று தானவர் சேட்டை யடக்கினு
னன்று வானவர்க் கேநலஞ் செய்தன
னென்று மேற்றிசை யுற்றமர்ந் தான்றுணில்
கன்று கொண்டவக் கண்ணிறைந் தானரோ. (உ௬)

வாசுதேவன் வழுத்திய காதையை
யாசு தீர வறைந்தன மாற்புவி
பேசு மத்தல மேன்மையும் பேசுவோம்
பூசு நீற்றிரென் றுன்புகல் வானரோ. (உ௭)

திருமால்பூசித்தபடலம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் ௫கக.

---

# தலவிசேடப்படலம்.



துன்னிய சடில மோலிச் சுந்தரே சுரர்க்கு நாளு
மின்னிய கயிலை மேரு விண்டவழ் பொழிற்கோ கன்னம்
பன்னிய காஞ்சி காசி பருப்பதஞ் சேது வுள்ளு
மன்னிய வுவப்புச் செய்யு மலிவளம் பொலியுஞ் சூரை. (க)

அன்னமர் தலத்து நாளும் வசிப்பவ ராயு ணீடிப்
பன்னருஞ் செல்வ மேவிப் பண்புடை மனைவி மக்க
ளென்னரும் பொலிய வாழ்ந்து மறுமையி லிமையோ ராகி
நன்னலந் துய்த்து நம்மான் மலர்ப்பத நண்ணி வாழ்வார். (உ)

மேதகு விரதம் வேண்டா விரிந்தகா னுதி புக்கு
மாதவ மியற்றல் வேண்டா வாரிசூழ் புடவி யேத்தக்
காதர மொழித்து நாளுங் கலந்தவர்க் கின்ப நல்கு
மாதரம் பயக்குஞ் சூரைத் தலனமர்ந் திருத்தல் போதும். (ங)

வளமனை வேண்டி னோரு மகநலம் வேண்டி னோரு
முளமிகு போக மெல்லா முற்றிட வேண்டி னோருந்
தளர்வரு தெய்வ போகஞ் சார்தர வேண்டி னோருங்
களமின்ம் பெருமான் மேய சூரையே கலத்தல் வேண்டும். (ச)

நித்தியங் கங்கை மூழ்கி நிகரிலாக் காசி மேய
வுத்தம விசுவ நாதன் றரிசன முவப்பிற் செய்து
பத்தியிற் பன்னா ளங்கு மேவலாற் படைக்கும் பேறு
வித்தகச் சூரை யோர்நாண் மேவினர் படைப்பர் மாதோ. (ரு)

ஆதலிற் சூரை யென்னு மருந்தல வாசஞ் செய்தல்
காதலி னெவர்க்கு நன்றாங் கலந்தமர் தரமுற் றதேன்
மேதகச் சின்னா ளேனும் விரும்பியாங் குறைதல் வேண்டு
மோதல்செய் ததுமுற் றதே லொருதின மேனுஞ் சார்க. (சு)

அன்னது முற்றா தென்னி னத்தல மார்க்க மேனு
மென்னருஞ் சேறல் வேண்டு மினையபுண் ணியத்தின் பேற்றா

துன்னருஞ் செல்வ மேவி மறுமையி லும்பராகிப்
பன்னரும் போகந் துய்த்துப் பரகதி யடைவர்பின்னர் (எ)

துலங்கிய புகழ்சால் சூரைச் சுந்தரே சுரருக் கென்று
நலங்கிளர் விளையுள் வாய்க்கு நன்னில நகரமொன்று
பலங்கொள நல்கு வாரேற் பார்முழு வதுநன் காண்டு
வலங்கொளச் சிவலோ கத்தின் மருவிவீற் றிருப்ப துண்மை. (அ)

அங்கயற் கண்ணி யோடு மருட்பெருஞ் சூரை மேய
நங்கடம் பெருமாற் கன்பி னலமலி பொழில்க ளாக்கிப்
பங்கமின் றுதவு வாரேந பண்ணவ ருலகஞ் சார்ந்து
கொங்கலர் கற்ப கப்பூங் குளிர்நிழ லிருந்து வாழ்வார். (கூ)

பொங்கொளிச் சூரை நாதன் பூசையைச் சிறப்பிப் போருஞ்
செங்கண்மான் முதலோர் போற்றத் திருவிழாச் சிறப்பிப் போரு
மெங்கணும் பகைவ ரின்றி யிரும்புவி முழுது மாண்டத்
திங்கள்வே ணியர்தஞ் செல்வச் சிவலோக மருவி வாழ்வார். (கய)

பெருகொளிச் சூரை நாதன் பிறங்குமா லயத்தி னுள்ளான்
மருவுறத் தீபஞ் செய்வோர் மற்றுள பணிக ளெல்லா
மருகுறு விருப்பிற் செய்வோ ரனைவரு மவன்சா ரூபந்
திருவுறப் பெற்று வானோர் சேவிக்க வாழ்வ துண்மை. (கக)

நலமலி சூரை மேய நாயகன் முடிமே லான்பால்
வலமுற மற்று நூலில் வகுத்தன சிறப்ப வாட்டிக்
குலமலர் வில்வஞ் சூட்டிக் கும்பிடு மேன்மை பெற்றோர்
அலர்தர வடையும் பேற்றை யறைதர வல்லர் யாரே. (கஉ)

சுந்தரே சுரர்க்குஞ் சேறகட் சுந்தரி தனக்கு நாளு
நந்தலி னெய்வி ராய நல்லமு தினிய தீம்பா
லந்தமில் கறிமுன் னாக நிவேதிப்போ ரடையும் பேறு
பந்தமிவ் முனிவீர் பூமேற் பனவற்குஞ் சொலமுற் றுதால். (கங)

தோற்றுசெங் கதிரோன் றீர்த்தந் துலங்குபொற் கமல தீர்த்த
மேற்றமார் விண்டு தீர்த்த மென்றுசொற் றிடுமோர் மூன்று
மாற்றருங் கருணைச் சூரை வள்ளலார் முக்கண் போலு
மாற்றல்சா லிவற்று ளொன்றிற் றோய்பவ ரமர ராவார். (கச)

சுந்தரர் முடிமேற் சாத்துச் சூளைமா நகரி னுள்ளா
னந்தனு வினங்கள் வைப்போர் நலமலி பொற்பூ ணுடை
யந்தமி லவருக் கீவோ ரமரரா யரம்பை மாதர்
சந்தமென் முலைமேற் றுஞ்சுந் தவாப்பெரும் போகந் துய்ப்பார். ()

திருமதி லூதி யாய பணிகளைச் சிறப்பச் செய்தும்
பொருவறக் கிலமாயுற்ற பணிகளைப் புதிய செய்து
மருமையிற் சூளை நாதற் கன்புவைத் திறைஞ்சு வாரேற்
றொருகுபல் கிளைகளுஞ் சூழப் பிறங்கிவாழ்ந் தமர ராவார். (கசு)

துதிமிகு சுந்த ரேசர் சூளைமா நகரி னுள்ளான்
மதிமிகு மறைய வர்க்கோர் மனைபுரிந் துதவு வாரு
மதிநல மடங்கண் மற்றை யடியவர்க் குதவு வாருங்
கதிநலங் காணி யாகக் கயிலையே மருவி வாழ்வார். (கஎ)

சுந்தரர் திருமுன் னுகத் துடியிடைக் கயற்க ணம்மை
சந்தமார் திருமுன் னுகச் சத்திர மொன்றுண் டாக்கி
யந்தமின் மறையோர் மற்றை யடியவ ருண்ணு மாறு
முந்தந்ன் கமுது நல்கு மவர்பயின் மொழியற் பாற்றே. (கஅ)

சூளையை நினைத்தோ ரீற்றிற் றுன்னுவர் சிவசா லோகஞ்
சூளையைக் கண்டோ ரீற்றிற் றுன்னுவர் சிவசா மீபஞ்
சூளையைத் தொழுதோ ரீற்றிற் றுன்னுவர் சிவசா ரூபஞ்
சூளையில் வசித்தோ ரீற்றிற் றுன்னுவர் சிவக்க லப்பே. (கக)

சூரிய தீர்த்த மூழ்கித் துலங்கவக் கரைமேல் வைகுஞ்
சூரிய மூர்த்தி பாதந் தொழுபவ ரனைய தெய்வச்
சூரியன் றேசு வாய்ந்து தொக்கபல் போகந் துய்த்தச்
சூரியன் பதத்து வாழ்வார் திரிசில ராகி யென்றும். (உo)

சூலாமேற் றிசையின் மேவித் துலங்குகண் ணிறைந்தானென்னும்
வீளைபோ னிறத்தி னானை மேதகப் போற்று வோர்கள்
பாளையூ தரிப்ப வாண்டு படர்கிளை சூழ வாழ்ந்து
சீளைவா யனையான் றெய்வ வைகுண்டஞ் சேர்ந்து வாழ்வார். ()

அன்னமா தலத்தின் மேய வலரியை யரியைத் தாழ்வோர்க்
கின்னமர் பலனுண் டாமே யிவர்க்கருள் வழங்கா நிற்கும்

பன்னகா பரணச் சுந்த ரேசரைப் பாக மேவு
நன்னர்வான் கயற்க ணாளைப் பணிபவர் நலமீ றுமால். (உஉ)

பற்பல வுரைப்ப தென்னே பண்புசான் முனிவீ ரந்தச்
சொற்படு சூரை மேய சுந்தரப் பெருமான் றாளுங்
கற்புயர் சிறப்பு வாய்ந்த கயற்கண யகிபொற் றாளு
மற்புறத் தியானஞ் செய்த லனைவர்க்குஞ் சிறந்த பேறும். (உங)

அத்தல மேன்மை யின்னு மளவில வாகு முற்ற
வத்தல மேய சுந்த ரேசனே யறைய வல்லா
னத்தலம் பொருவ திந்த வகலிடத் தில்லை யின்னே
யத்தலம் பணிவோ மென்று ரைாரு ணிறைந்த சூதன் (உச)

உரைத்தது கேட்ட லோடு முவகையங் கடலு ளாழ்ந்து
புரைத்தவவ் வேள்வி முற்றிப் பொருக்கெனப் போந்து மூத்தங்
கரைத்தலை யொதுக்குஞ் செம்பொற் கமலநீர் படிந்தி யாரும்
வரைத்தடஞ் சிலையான் கோயில் புக்கனர் மகிழ்ச்சி பொங்க. ()

முனிவரர் நந்தி யண்ணன் முன்பணிந் தெழுந்து சூழ்ந்து
தனிவரு சுந்த ரேசத் தம்பிரான் செம்பொற் றாளுங்
கனிவரு மிரதத் தீஞ்சொற் கயற்கணண் மலர்ப்பொற் றாளும்
பணிவருங் கண்ண ராகிப் பரவித்தம் மிருக்கை புக்கார். (உசு)

இத்தகு புராணந் தன்னை யெழுதுவோ ரெழுது விப்போர்
வித்தக மொருந்தக் கற்போர் கேட்பவர் பொருள்வி ரிப்போ
ரத்தனை பேரு மண்மே லளவிலா போகந் துய்த்துச்
சித்தநன் குடைய ராகிச் சிவலோக மருவி வாழ்வார். (உஎ)

நம்பல மான சூரை நன்னகர் வாழ்க மென்பூங்
கொம்பனை கயற்க ணம்மை குலவருள் வாழ்க வும்ப
ரிம்பரேத் தெடுக்குஞ் சுந்த ரேசர்தாள் வாழ்க வன்று
ரம்பலத் தெடுத்த செம்பொ னடித்தலம் வாழ்க வாழ்க. (உஅ)

தலவிசேடப்படலம் முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் ருஙகூ

---

## சூரைமாநகர்ப் புராணம் முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.

கணபதிதுணை.

# அரும்பதவுரை.

## கடவுள்வாழ்த்து.

க. உச்சகரமொழி இரண்டு-உசு, மூசு. என்பன; அவற்றுள், ஒன்று மூசு; இது குரங்கினுள் ஒரு சாதிப் பெயர். மடங்கல் - நரசிங்கம். ஓமேவு குஞ்சரம் - பிரணவ குஞ்சரம். அப்பிடி - சத்திப்பிரணவமாகிய பெண் யானை.

ந. வதரி - இலந்தை மரம். இச்செய்யுளிற் சோமசுந்தரக்கடவுள் மதுரையிலிருந்து சங்கப்புலவர்க்காக இத்தலத்திற்கு எழுந்தருளி காட்சி கொடுத்தமை கூறப்பட்டது. இதனைச் சங்கப்புலவர்பூசித்த படலத்தா லுணர்க.

ச. மயற்கண் அம்மையும் வீழ்ந்து; அம்மை - வருபிறப்பு. செயற்கணங்களைச் சற்றுயினும் மை அறு வகை செய்து. பெயற்கு அண்ணுகின்ற நம்மையும்.

ரு. சடையமர் மடநலாள் - கங்கை. இடையமர் புலி - புலித்தோல்.

எ. மற்றை உது - உணர்தல். பசு-ஆன்மாக்கள்.

அ. மன் - அசைநிலை. திதித்திடு-காத்தருளுகின்ற.

கூ. கருதலாய மானம் - அனுமானப்பிரமாணம்.

கக. குரவு - ஆசிரியத்தன்மை. சூரல் - பிரம்பு.

கஉ. "அறவினை யாதெனிற் கொல்லாமை கோறல், பிறவினை யெல்லாந் தரும்" என்பது திருக்குறள், நஉக.

கந. ஆணெனப்பட்ட பெண்ணை-ஆண்பனை. பெண்ணேயாக - பெண் பனையாக.

கச. குழிசி பானை. கொண்ட விரதம் குலைத்து - தாம் கொண்டிருந்த சைனமதத்திற்குரிய விரதங்களை ஒழித்து.

கரு. ஆக்குவித்தோன் முதலியோர் சிவபெருமானொருவரேயாக; பாக்கு - வினையெச்சவிகுதி.

கஎ. மருங்கின் ஆதாரம்.

கஅ. அவை - அத்தீமைகளை.

உக. துணைத்து-ஒன்றை ஒன்று ஒத்து. ஆளை, ஐ - சாரியை.

## ஆக்குவித்தோர்.

உ. காரையம்பதி - காரைக்குடி

ந. தளி - கோயில். விளர் - அறியாமை.

## அவையடக்கம்.

க. விசயாலயன் - பௌன்ஞன விசயாலயனென்னும் சிற்றரசன். சூரனும் விசயாலயனும் பூசித்ததை இந்நூலுட் பின்னர்க் காண்க.

உ. என்பாடல் குணமாய்க் குணமும் குற்றமுமாய்க் குற்றமாய் மருவிடுமேனும். முற்காட்டு - முன்பு எடுத்துக் காட்டிய பிறை, அரவு, விடமென்பன.

## சிறப்புப்பாயிரம்.

க. துமித்தல் - அறுத்தல். | உ. கழிஞியம்பதி - கோயிலூர்.

## திருநாட்டுப்படலம்.

உ. கொடுங்குன்றம்-பிரான்மலை.

ரு. கைகுறைத்தோன் - ஒருபாண்டியன்; இவன், தன் கையைக் குறைத்துக்கொண்ட கதையைச் சிலப்பதிகாரம், கட்டுரைகாதையாலுணர்க.

ச. சீர் நறை - சீராகிய தேன்.

ரு. இச்செய்யுளில் எருஉ, எருக-ம் திருக்குறளின் கருத்துக்கள் முறையே அமைந்திருத்தல் காண்க. நக்க் - விளங்கிய.

சு. முல்லை-முல்லைநிலம். கானம்-சண்டுத்தொகுதி. பூவை-காயாமரம்.

எ. வெறுத்த - மிக்க. மாதவன் - அகத்தியர்.

அ. தடித்து - மின்னல். அறல் - நீர். தோற்றிட - தோன்றும்படி செய்ய.

க௦. வேந்தன் - இந்திரன்; பாண்டியனுமாம்.

கக. வெள்ளிச் சங்கை - ஆகாயகங்கை. மலயம் - பொதியின்மலை.

கஉ. பறம்பு - மலை. சீர் - புகழ். பிரதாபம் - வீரத்தாலுண்டாகியபுகழ். செம்மணி பிரதாபத்திற்கும் வெள்ளருவி புகழிற்கும் உவமைகள்.

கரு. குங்குமம் - ஒருவகை மரம். மிகை - அதிகம். துணையும் - ஒக்கும்.

கச. நொடித்தல் - சொல்லுதல்.

கரு. கருவி - கூட்டம். இருவி - தினைத்தாள். பொருநை - தாம்பிரபன்னிநதி.

கஎ. நரலை - கடல். பாடு - பக்கம் சர்த்தமாநதி - வைகையாறு.

கஅ. கழனிவாயில் - கோயிலூர். மதுநதி - தேனாறு.

உ௦. பரி-குதிரைமரங்கள். பணி-பாம்புபோல் திரைத்த வைக்கோற்புரிகள். பலாலம் - வைக்கோல். ஓ-மதகுநீர் தாங்கும் பலகை.

உக. பார் நடத்து ஆதி நன்னூல்-பூமியாகிய தேரை நடத்திய சிவபெருமான் அருளிச்செய்த வேதாகமங்கள். உதக்கு - வடக்கு. முன் திசை - கிழக்கு.

உரு. வன்காலர் - வலிய காலையுடைய உழவர், வலிய கூற்றுவர். கடா முதலியவற்றை இருதிறத்தார்க்கும் அடைகளாக்குக.

உசு. கான் ஆதி - காடு முதலியவற்றில்.

உஎ. கங்கு - வரம்பின்பக்கம்.

உஅ. பாசம் - கயிறு, ஆணவம் முதலியவைகள்.

உகூ. வயல்கள் தழைதர - வயல்கள் தழைக்க.

௩உ. கழகம் - கல்விச்சாலை. பள்ளிக்கணக்கா - மாணாக்கர்.

௩௩. தள்ளிய - தள்ள.

௩ச. களை களை பருவம் - களைகளைக் களையும் பருவம். புரி - கயிறு. திரைத்து - சுருட்டி.

௩ரு. மருவலர் - மணத்தையுடையபூ, பகைவர்.

௩சு. பூ - பூமி, மலர்.

௩எ. தண்டல் - நீங்குதல.

௩அ. சுகம் - கிளி.

௩கூ. கமலராசி - தாமரைமலரின் கூட்டம். குலை - கரை. ஆய - ஆயின.

சக. நகப்படை - நகங்களாகிய ஆயுதம், சிங்கம், புலி. சிங்கத்திற்கு நகாயுதமென்று ஒரு பெயருண்டு. ஆம்பல் - ஆம்பற்பூ, யானை. தாமரை - தாமரைப்பூ, தாவுகின்ற மரையென்னும் விலங்கு.

சரு. அவாய் - விரும்பி.

சஎ. காரா - அன்பு.

சஅ. வைப்பொடி - கூளம்.

ரு௦. கந்தி - கமுகமரம்.

ருக. இதை - புதுக்கொல்லை.

ருஉ. இசும்பு - வழுக்கல். ஒப்புதல் - ஓட்டுதல்.

௫௩. குடஞ்சுட்டுகவ் - பசுக்கள்.

௫௪. கொன்றை வேய்ங்குழல் - கொன்றைப் பூவைச்செருகிய மூங்கிற் குழல்.

௫௫. திமில் - மீன்படகு.

௫௬. கோடு - கரை. மாடு - பக்கம்.

௫௭. உகுத்து இதஞ்செய்வ.

௫௮. நாமம், நாம் - அச்சம்; அம் - சாரியை. கொற்றி - துர்க்கை.

## திருநகரப்படலம்.

௨. சேரி - மதில்.

௫. முன்னிய - முன்ன. தவமுயல் தவம் - தவஞ்செய்தற்குக் காரணமான தவம்.

௭. சிவபெருமானருளால் நாரை முத்திபெற்றதைத் திருவிளையாடற்புராணத்தாலுணர்க.

௮. குரண்ட ராசி - கொக்கின் கூட்டம். கொக்குவடிவமுள்ள பகாசுரனென்பவன் பகைமையுற்றுச் சிவபிரானாற் கொல்லப்பட்டானென்பது புராணகதை.

௧௨. இயற்பெயர் மீனமென்பது. தாம் விதத்தின் - தாவுகின்ற விதம் போல.

௧௪. நாவலர் - சங்கப்புலவர்.

௧௬. காளிந்திநதி - யமுனாநதி. இதில் தாமரைப் பூவின்மேல் அம்பிகை சங்க வடிவங்கொண்டெழுந்தருளியிருந்ததைக் கந்தபுராணத்தாலுணர்க.

௧௭. குளா - முழக்கம். புரை எறி - குற்றத்தை நீக்கிய. இரு நிதி - சங்கநிதி, பதுமநிதி.

௧௮. ஆரிய - நுகர்தற்கு.

௧௯. உள்ளிய - நினைக்க. சவி - "பிறந்தபிறப்பால்" என்னும் வெண்பா. இதனை இப்புத்தகத்தில் ௬0-ம் பக்கத்திற் காண்க. ஓதிவிட்டவன் - பொன்னனை விசயாலயதேவன்.

௨0. தடம் - ஈண்டுச் சூரியதீர்த்தம். நாயகன் - சூரியன். இத்தீர்த்தக்கரையிற் சூரியனுக்குக் கோயிலுள்ளது; சூரியன்பூசித்தபடலத்தாலுணர்க.

௨௩. பழையர் - கள்விற்போர்.

௨௪. கால் - காற்று.

௨௬. அம் கதிரும் காதல்செய்.

௨௭. புனைந்திடும் கால்கள், பரிகால்கள்; பரித்தல் - தாங்குதல். பரிபடும் - வருத்தம் நீங்கிய.

௨௮. கல் - நடுகல்; போரிலிறந்த வீரனுடைய பெயரை ஒருகல்லிலெழுதி அதைநட்டு அவனாகப்பாவித்து வழிபட்டுவருதல் மரபு; இதனைப்புறப்பொருளிலக்கண முதலியவற்றாலுணர்க. கல்லூரி - கல்விச்சாலை.

௨௯. கணை - கணையாலாகிய புண். பின்னுள்ள அயில் முதலியவற்றிற்கும் இங்ஙனமே பொருள்கொள்க. கழுக்கடை - சூலம். வசி - வாள். உலவை - கொம்பு. எஃகம் - சக்கரம். நிறம் - மார்பு.

௩0. எய்த்திடாது - இளையாமல்.

௩௧. சோமசுந்தரக்கடவுள் எழுகடலையும் அழைத்தருளியது ஈண்டு அறியற்பாலது. இஞ்சி - மதில்.

௩௨. பொலிவரை - மேருவரை.

௩௪. கோட்டுநாறு - சங்கின் சுண்ணம். இறுத்தது - தங்கியது. நயக்கும் - ஒக்கும்.

௩௮. மட்டு - அளவு. மாதிரம் - திசை.

௪௪. உபசரித்து அல்லால் - உபசரித்தாலன்றி. வார்தெரு - நீண்டதெரு.

௪௫. மலைதரா - மாறுபடாத.

௪௬. மயங்கும்செய்கைஇல்லாத.

௪௮. துணங்கறல் - இருள்.

௫0. வானர் - தேவர்.

௫௧. பூதி - விபூதி. மும்மலங்களைக் காதி; காதி - கெடுத்து.

௫௨. பாகு - குழம்பு.

௫௩. சோமசுந்தரக்கடவுள் தண்ணீர்ப்பந்தர் வைத்தருளிய திருவிளையாடல் ஈண்டு உணரற்பாலது. காணி - உரியது. பாணி - நீர்.

௫௪. நான்மார்க்கமாவன, தாஸமார்க்கம், சற்புத்திரமார்க்கம், சகமார்க்கம், சன்மார்க்கமென்பன. ஒது அமார்க்கம்.

௯எ. கண்ணிறைந்த பெருமாளென்பது - இத்தலத்திலுள்ள திருமாலின் திருநாமம்.

௯அ. சோமூன்றும் - மும்மதிலும். படர்ந்து - நினைந்து.

௯௯. உதவிசெய்பாக்கு - உதவி செய்யும்பொருட்டு.

௬௧. தெவ்வுவான் - கொள்ளும்பொருட்டு. தெவ்வும் - பகையும். கண்டகம் - முள்.

௬௨. அண்ணுகிற்றலின் - அணுகுதலால்.

## நைமிசவனப்படலம்.

௨. வருக்கை - பலா. தூங்கனிகள் - தூங்குகின்ற பழங்கள்.

௩. இச் செய்யுள், நைமிசத்திற் பகையின்மையைப் புலப்படுத்திற்று.

௪. அற்புஅகம், அகம்-மனம். அது-அமுதம் பெறுதற்குச் சுவர்க்கம்செல்லுதல். எண்மையதோ - எளியதா.

௫. மஞ்சு - அழகு. நனைப்ப - நனைப்பார்கள், நனைப்பன. தஞ்சு-பற்றுக்கோடு. மாக்குலம் - விலங்கின் கூட்டம்.

௬. சோதம் - குரோதம.

௭. கறையடி - உரல்போன்ற அடி.

௮. தூயவன் - சிவபெருமான். இதழி - கொன்றைமரம்.

௯. யாத்து - கட்டி. படர்ந்து - தியானித்து.

௧௦. உழை - மான். அறுபகை அறுபகையாகிய - காமமுதலிய ஆறனையும்வென்ற; இது, முனிவர்கள் சிவஸாரூபம் பெறுவதைப் புலப்படுத்தியது.

௧௩. தளைத்து - கட்டி.

௧௯. தள்ளிய இருவினையான் - இருவினைகளையும் விலக்கியவன்.

௨௦. வாதராயணன்-வியாஸமுனிவர். மாணவகர் - மாணாக்கர்.

௨௨. ஓவரும் உவகை - நீக்கமில்லாத மகிழ்ச்சி. ஊறு - கேடு.

௨௫. புத்தி - போகம்.

௨௯. மிறை - நடுக்கம்.

௩௨. உதீசித்திக்கு - வடதிசை.

௩௩. இரண்டுபுள் - அன்னமும் கருடனும். மயூரம் - மயில். இளஞ்சேய் - முருகக்கடவுள். மயூரவெற்பு-குன்றக்குடி. குணக்கு - கிழக்கு. முன்னொருகாலத்தில் பிரமதேவருடைய வாகனமாகிய அன்னத்தையும் திருமாலின் வாகனமாகிய கருடனையும் விழுங்கி, முருகக்கடவுளால் 'கல்வடிவமாக' எனச் சபிக்கப்பெற்ற மயில ஈண்டுவந்து மலை வடிவங்கொண்டு பன்னாட்கிடந்து முருகக்கடவுள் தன்பால் எழுந்தருள, அச்சாபம் நீங்கப் பெற்றதென்பது மயூரகிரிபுராணகதை.

௩௪. சத்தியகிரி - திருமெய்யம்.

௩௫. வீணாவனம் - சாக்கை.

௩௬. பனித்த - குளிர்ந்த. 'மனித்தரின் - மனிதர்போல.

௩௮. தொன்று-பழமை. அன்றுரை - விரோதித்தசொல்.

## சூரியன்பூசித்தபடலம்.

௧. நண்ணிய கருதி - நண்ணநினைந்து.

௨. புனைந்து - அலங்கரித்து. அகழ்தரு - பெயர்த்த.

௩. சபித்தும் - சபிப்பேம். ஆலோன் - சந்திரன்.

௪. ஓர் மங்கையென்றது உரோகிணியை.

௬. விதி - கட்டளை.

௭. இறுத்த - தங்கிய.

௯. வாழிய - அசைநிலை. ஆழிய ஆழ்ந்த.

௧௦. விது - சந்திரன். மஞ்சனை - அழகனை.

௧௧. கோட்பட்டார் - கொள்ளப்பட்டவர்.

௧௨. அல்பக - இருள்கெட. மோலி - கிரீடம். பொற்பு அகம் பொலிய.

௧௩. எச்சன் - யாகத்தின் அதி

தேவதை. கச்சம் - அளவு. யாழ்முனி - நாரதர்.

கரு. மகதி - நாரதரது வீணை. வீரன் - வீரபத்திரக்கடவுள்.

கசு. போற்றிய - போற்ற. ஆற்றிய - செய்ய. மாற்றிய - மாற்ற.

கஎ. புலிப்போத்து - ஆண்புலி.

கஅ. பகன் - ஆதித்தர்பன்னிருவருளொருவன்.

ககூ. சவி - அழகு.

உ0. இன்னணம் இன்னவண்ணம்.

உக. சான்று - ஸாக்ஷி.

உஉ. எண்வகை உடம்பு - அஷ்டமூர்த்தம். கய்மை - கீழ்மை.

உரு. சிதம்பு - கீழ்மை. நிலாவிற்கு - சந்திரனுக்கு.

உச. நின்று - இகழ்ச்சிக் குறிப்பு.

உரு. சமழ்ப்பு - நாணம். குழகன் - பேரழகையுடையவன்.

உஎ. இழுதையேன் - அறிவில்லாதேன்.

உஅ. சிகை-தீக்கொழுந்து. நகை - ஒளி, பல். முகை - அரும்பு.

உகூ. கரிசு - குற்றம், வெறி - வாசனை. மிலேச்சிய - சூடிய.

ரு0. மாயக்கோல் - திருமாலாகிய அம்பு.

ருக. கேழ் - நிறம். வம்பு - புதுமை. ஓங்கல் - மலை. நம்பு-விருப்பம். பம்புதல் - பரவுதல்.

ருரு. கொங்கு - வாசனை.

ருசு. அழலோன் திக்கு - தென்கிழக்கு. ஒன்றேனும் இணைய வாராது.

ருஎ. காற்றி - நீக்கி.

ச0. மலரிய - மலர.

சக. மற்றையோர்தம்முள் அறியவல்லார் எவர்,

சஉ. தெருட்டு - தோன்டி. எள்ளல் - இகழ்தல். உள்ள - நினைக்க.

சரு. ஏதம்-துன்பம்.ஓதம்-கடல்.

சரு. ஒற்றுடை-ஈரம் புலர்த்தும் ஆடை. அதிசுவை - மிக்கசுவை.

சஅ. நந்தும் நந்து - பெருகிய சங்கக்குழையை. நன்றுஉகந்து. கந்துகக்கையோடும் - பந்தையணிந்த திருக்கரத்தையுடைய உமாதேவியாரோடும்.

சகூ. தள்ளிய சடையாய் - முடிவைத்தள்ளியவரே. தரக்கு அதள் - புலித்தோல். நள்ளிய - பொருந்திய.

ரு0. மாட்டி - மாளச்செய்து. தளைத்து நின்று அடர்க்கும் மலம் - கட்டிநின்று வருத்துகின்ற மலம்.

ருரு. வித்தகம் - ஞானம். ஒத்து அகம் உவப்ப.

ருச. ஆழி - தேருருளை. வாழி - அசைநிலை.

ருசு. பொன்றல் இல் - அழிவில்லாத.

ருஎ. உவாமதி - பூரணசந்திரன். குவால் - குவியல்.

ருஅ. எரிமருள் - நெருப்பைப்போன்ற. தோம் என் உடையவர் - குற்றம் யாதுடையவர்; குற்றமில்லாதவரென்றபடி.

ருகூ. சிவனுக்கு - கருப்பாயாக.

சுஉ. எண் - எள்.

சுரு. அந்தை - அசந்தை. அதான்று - அஃதல்லாமலும்.

சுஎ. அணங்கு - பேய். எறும் - வலி.

சுகூ. தென்புலத்தவர் - பிதிரர்.

எ0. சந்தம் - அழகு.

## சூரன்பூசித்தபடலம்.

க. மனமுதல்மூன்று - மனம் வாக்குக் காயம். பக்க - பக.

ரு. அரணம் - கோட்டை முதலிய காவலிடங்கள். கருவி - ஆயுதம்.

ச. மானம் - அளவு,

ரு. அலகு - துடைப்பம்.

சு. நானம் - கத்தூரி.

எ. கரந்து - ஒளித்து. வடி - கூர்மை. உரம் - மார்பு. தெவ்வை - பகையை=சூரன்முதலியவர்களை.

கூ. வரை-கிரவுஞ்சகிரி. எல்-ஒளி.

க0. பணியலன்-பணியாதவன். திணி - திண்மை. அமர்த்தனன் - சண்டை செய்தான்.

கச. பொன் - சூரியன்.

கஉ. கொற்றம் - வெற்றி. பொற்ற - பொலிவுபெற்ற. அற்றம் - சோர்வு. ஆடுதல் - போர்செய்தல்.

கங. கண்டு அலமந்து. தருவி - தேடி. சூர் - சூரன்.

கச. இரிந்தான் - கெட்டோடினன்.

கரு. கொன், உம், மற்று - அசை நிலைகள்.

கசு. மூன்றும் உகும்படி அருளைப் பெற. உதவும் - உதவுவார்.

உ0. பரிதி - சூரியன். சூழல் - இடம். அவண் - அவவிடம்.

உக. உயங்குதல் - வருந்துதல். குமரப்புத்தேள் மற்றுமோரிடத்தையுற்றான். பயம் - பிரயோசனம்.

உஉ. புலவர் - தேவர். நலவர் - நன்மையையுடையவர். பல் நாவலவர். கலவர் - கீழ்மக்கள். கடிவரல் - விரைந்துவருதல்.

உச. தண்ணமைதரும்.

உரு. நாறித்த - முழங்கிய.

உசு. கூவிளம்-வில்வம். மருந்து - அமிர்தம். முகமன் - உபசாரம். துழாய்க்கோதும் - திருத்துழாயையணிந்த திருமாலாகிய அம்பு.

உஅ. கோட்டி - வளைத்து. விபாளம் - பாம்பு.

உகூ. பார் அமை தேர - பூமியாக அமைந்த தேரையுடையீர். தார அமை ஆர - மாலையாக அமைந்த ஆத்தியையுடையீர்.

ங0. உகிர் - நகம். காளம்-விடம். தேர்வு அரு - ஆராய்தற்கரிய. உத்தாளம் - பூச்சு. மொய் - வலி.

ஙக. அபிராமம்-பேரழகு. ஈமம்-மயானம். வாமம் - இடப்பக்கம். ஏமம் - இன்பம். யாமம் ராத்திரி.

ஙங. வேட்டது என் - விரும்பியது யாது.

ஙரு. வந்து ஐயா.

ஙசு. போதி - போவாய்.

ஙஎ. போது இல்லான் - பிரமன். ஏதிலான் - அயலான். மகிழ்ச்சி எய்தினன் - மகிழ்ச்சியை அடைந்தனன்.

ஙஅ. தனு - வில்.

சக. மாவாய் - மாமரமாய். கீளப்பட்டு-கிழிக்கப்பட்டு. இருபுள்ளாய்-கோழியும் மயிலுமாகி.

## பொன்னுன விசயாலயதேவன் திருப்பணிப்படலம்.

க. பசை - அன்பு.

உ. விராம் - விராவும். அண்மி - அடைந்து.

ங. குறுநிலமன்னர் - சிற்றரசர். முறுவல் - சிரிப்பு.

எ. மந்திர உருவன் - சிவபெருமான்.

கூ. கடுக்கைத் தாரு - கொன்றைமரம்.

க0. பலாசு - புரசமரம். துணைவது - ஒப்பது.

கக. மாலாய பூயோதர ஊர்தி - திருமாலாகிய மேகவாகனம். ஏறு - இடபம்.

கச. வளி - காற்று. விசயன் - அருச்சுனன்.

கரு. முண்டகம் - முள்.

கஎ. வாரிசட தாமரை.

கஅ. குரு - நிறம்.

ககூ. சூழ்வான் - ஆராய்வான்.

உ0. துனைந்து - விரைந்து. சிவக்குறி - சிவலிங்கம்.

உக. வல்லை - விரைவு. அண்டர்-தேவர்.

உஉ. சுயம்பு-தானேதோன்றியது.

உங. அரு - அருபம். மாணமாட்சிமைப்பட. வாளா - சும்மா.

உரு. தடப்பால்-தடாகத்தின்பக்கத்தே.

உசு. திருக்கு - மாறுபாடு. மருகையாத - மணம் நீங்காத.

உஎ. ஆத்தன் - சிவபெருமான்.

உஅ. அரவு சூடி-சிவபெருமான். புரவு - காத்தல். கரவு - கள்ளம்.

உகூ. மன்னுயிர் அளவில் சுகமுறுதலே.

ஙங. அகழ்ந்துபோக்கி - தோண்டியெறிந்து. இசை - கீர்த்தி.

௩௯. பாவுதல் - பரவுதல். ஒவு கவலை உடையானும் - கவலையில்லாத வனாகி; ஓவுதல் - ஒழிதல்.
௪0. நவியம் - கோடாரி. சுயம் - அரிவாள். அடவி - காடு. எறிந்து - வெட்டி.
௪க. சிற்பம் - சிற்பநூல். பொ ற்ப - அழகுபொருந்த. நிற்ப - தூண் முதலியவைகள். கிடப்ப - விட்டம் முதலியவைகள்.
௪உ. ஆன்ற - அமைந்த.
௪௩. ஆழா - ஆழ்ந்து.
௪௬. மறுகு - வீதி. பிறங்க - விள ங்க.
௪௫. மூவா - அழியாத.
௪௬. நார் - அன்பு
௪௯. எய்ய - அறிய.
௫0. குரோசம் - நீட்டலளவைக ளுளொன்று.
௫க. மதனுல்வருந்தான் - சிவபெ ருமான். சென்றருளி வெளிசெய்தா ன். பதன் - பக்குவம்.

## பொன்னுன விசயாலயதேவன் நிருத்த தரிசனஞ்செய்தபடலம்.

௨. அதிரா - நடுங்கி.
௫. நிலவு ஆதரம்.
௬. எண்ணார் - பகைவர்.
௭. செந்தாமரைக்கண்ணர் - பிரம தேவனும் திருமாலும்; கண் - இடம், விழிகள்.
௮. ஆருயிர் - அருமையான உயிர். மூளை - பிள்ளை; என்றது மார்க்கணடே யனை.
௯. கொம்பு ஆர் - கொம்பையொ த்த.
க0. சத்து - உண்மை.
கக. பரித்தாய் - தாங்கினுய்.
கஉ. நத்தான் - திருமால்; நத்து - சங்கம்.
க௫. வழுத்து ஆதரம். கரமான் உரி - யானைத்தோல்.
க௮. திருப்புத்தூரில் ஸ்தலவிரு க்ஷம் கொன்றை. சீதளிதீர்த்தம் - அத்தலத்துத் தீர்த்தங்களுள் ஒன்று. இது திருமகளாலுண்டாக்கப்பெற்றது.
உஉ. வெரிந் - முதுகு. மும்மலம் இரிய.
உ௪. மதலை-சொன்றை. அதில் - அச்சொல்லில்; முதல்குறைந்தமாலி கை - தலைமாலை. விதலை-நடுக்கம். மு தலை-முதிய அலைகளையுடையசங்கை. அதலை அதலை - அஃதல்லாய் அஃதல் லாய்.
உ௫. துடி - உடுக்கை. உஞற்றி - செய்து.
உ௬. தலைமிசைச்சூடினுன்.
உ௭. சுற்றுகால் - சுற்றிவருங்கா லத்தில். பிணைந்து - விரும்பி.

## சங்கப்புலவர்பூசித்தபடலம்.

க. சால - மிகுதி.
உ. ஒருவாது - நீங்காமல். கூறு - அம்சம்.
௩. திருந்தார் - பகைவர். ஏதிடு மேனும் வருந்தார். தார் - மலர். பிற க்குறுதல் - விளங்கச்செய்தல்.
௫. அன்னே - ஐயோ.
௬. கள்நனைதரும்.
௭. கமை - க்ஷமை.
௮. உருப்பம் - உட்டினம்.
௯. தளம் - பூவிதழ். சூளம் - நெ ற்றி. கோமளம் - அழகு.
க0. வையம் உண் விடை - திரு மாலாகியவிடை. விதி - பிரமன்.
கக. ஆடகம்-பொன். அன்புஉள் ளம். பாணி - தாளம். பூணி - இட பம் காடகத்தூணி - முல்லைநிலமாகிய அம்பறாத்தூணி; திருமால் அம்பாத லின், அவருக்கு இருப்பிடமாகிய முல் லைநிலம் தூணியாகக்கூறப்பட்டது. தோணி - அம்பு.
கஉ. மந்தணம்-ரஹஸ்யம். போ தம் - ஞானம்.
க௩. மறைக்காடு-வேதாரணியம்.
க௪. கரு-பிறவி. வெரு - அச்சம்.
க௫. வித்தகம் - திறமை. பூமிதே ராதலின், "மாயோன்சித்தம்வைத்து அவாவிச்சேருந்தேரான்" என்றார்.

கஎ. நீலி - நீலநிறமுடைய உமா தேவியார். வாலியான் - தூய்மை யையுடையவன்.

கஅ. ஆலம் - விடம். அக்கமார் பாலம்-கண்பொருந்தியநெற்றி. களம்- கழுத்து.

கக. வேயில் - மூங்கிலாகியவீடு. ஞாயில்-மதில்; என்றது திரிபுரங்களை. பருப்பதம் பாய் இல் - பருப்பதத்திற் பாய்ந்துவிளையாடுகின்ற மனைவி.

௨௦. தெய்வஆ-காமதேனு. உவா வை-பூரணப்பொருளை. குருந்துகூறப் பட்டமையின், இதிற்கூறியதலம் தி ருப்பெருந்துறையென்றுகொள்க.

உக. தேசு - ஒளி. தூசு - ஆடை. தழல் ஆசம் - தீயையுண்டாக்கும் சிரி ப்பு.

உஉ. முடியின்மேல்ஆரானை,ஆர்- ஆத்தி. நக்கு ஆர்த்து ஆனையையுரித்த. வையம்-தேர். பற்றார் - பகைவர். கா ணப்பேர் - காணையார்கோயில்.

உரு. கொன்றை வாசத்தையும் தடம் திவலையையும்வீச. அளி-அன்பு. அள்ளிவிழுங்கும்.

உச. வார - ஒழுக.

உகூ. புறப்பொருள் - புறப்பொரு ளிலக்கணம். அது புகழ்ந்தனர்பரவ லென்னுந்துறை.

உஎ. இறை - சிவபெருமான், கடு ப்பு - விரைவு. புத்தியென்பது பெரி யோரேவுங்காற் சிறியோர்கூறும் உட ன்பாட்டுக் குறிப்புமொழி.

௩க. நக்கு - சிரித்து.

௩உ. இன்னே இப்பொழுதே.

௩௩. நாயன் - தலைவன். நலக்க- அழகுபெற.

௩ரு. 'கருத்துணராக்கூற்று' என் பதன்முன் 'யாம்கூறியசொல்' என்ப தனை வருவிக்க.

௩அ. இணர் - பூங்கொத்து.

௩கூ. புணரி-கடல், குடிஞை-ஆறு.

௪௦. வலர் - வல்லவர். நலர் - நல் லோர்.

௪க. அவிழ்வளாய் - கலந்து. மதுப் பொய்கையென்பது. கோயிலூரிலு ள்ள தீர்த்தத்தின் பெயர்.

௪உ. ஆலப்பரிய பூணுகளென்பைக் கொண்டவர். நன்புலம் - நன்செய்.

௪௩. மூருக்கி - அழித்து. செழு விய - செழித்த.

௪௪. அடை - இலை.

௪எ. பளிதம் - கருப்பூரம்.

௪அ. போற்று - துதித்தல்.

௪கூ. வசதி - வீடு. கண்ணிய கருதிய.

ரு௦. கப்புரம்-பச்சைக்கருப்பூரம். ஒருங்கு - ஒருமிக்க.

ருக. கலிங்கம் - ஆடை. பொன் செய் மென்றுகில் - பீதாம்பரம். மதாணி - பதக்கம். ஆழி - மோதிரம். குழை - குண்டலம்.

ருஉ. மாவலன் - குதிரைவீரன். வழுதி - பாண்டியன்.

ருச. சடிலமோலி-சடாமகுடம்,

ருரு. கனக கஞ்ச வாவி - பொற்று மரைத்தீர்த்தம்.

ருகூ. சரு - தேவருணவு.

ருஎ. புவனம் - நீர்; என்றது ஆகாயகங்கையை. புவன உருகூடு - புவனங்களினுருவமாகிய கூடுகளை.

ருஅ. பாலன் - மார்க்கண்டேயர். உரும் - இடி. சடாப்பகடு - எருமைக் கடா. மறலி - இயமன்.

ருகூ. வண்டு நிறீஇ - வண்டுகளா கிய நாணை நிறுத்தி. கழை - கரும்பு.

௬௦. கருத்து அலர்த்தி. அருத்தி- ஆசை.

௬உ. தாவாத - கெடாத. ஆவா - ஐயோ, குறள் - குண்டோதரன். தே வாதிதேவன் - தேவர்களுக்கு ஆதியா கியதேவன்; மகாதேவனென்றபடி.

௬௩. பாவொலி-பரவிய ஒலி. ஏ- அம்பு. சே - இடபம்.

௬௪. பகர்ந்து - விற்று.

௬௬. சேல் திகழ்கண்.

௬எ. பொறித்து - எழுதி. 'முகிழ்ப் ப - தோன்ற.

௬அ. மாதுலனாய் - மாமனாகி.

௬கூ. குழவு ஏறுழிகள் - பன்றிக் குட்டிகள்.

எ௦. தன்னுடைய பேரம்பு-சுந்த ரப் பேரம்பு. கொளுத்தி-பொருத்தி.

கலாம் - பிணக்கு. தென் - அழகு.
எக. புலர்ந்த - விடிய. இகம் - இவ்வுலகு. இந்திரமானம் - இந்திரவிமானம்.
எசு. கந்தமார்குழல் - உமாதேவியார்.
எ௫. குரு விழாவகை - அழகு கெடாத விதம்.
எசு. இராப்பொழுது மிக நீண்டு தோன்றியதென்பார், 'விடிவுணரார்' என்றார்.
எஅ. நென்னல் - நேற்று.
எகூ. அக்குமணி-உருத்திராக்ஷம்.
அ0. வடி - தேன்.
அ௩. மாலாத-மயங்காத. ஏலாத-ஏற்றுக்கொள்ளத்தகாத தீக்குணங்களை. சூலாத - பிறரால் தோண்டி எடுக்கப்படாத. சூன்று-தோண்டி. தோலாத - தோல்வியடையாத.
அச. தலைப்பட்டு - கலந்து. உணர்வான் - உணரும்பொருட்டு. அதுலமாய் - ஒப்பில்லாததாகிய.
அ௫. கசடு - குற்றம்.
அசு. ஒல்லாதவற்றை. நீற்றி-நீறாக்கி.
அஎ. தொன்று - பழமை.
அஅ. ஒன்றும் - சிறிதும்.
அகூ. எல்உலவா - ஒளிகெடாத. அல்உலவாக்கண்டத்தார்.நீலகண்டர்.
கூ0. புரைஆருயிரும் உயல் உற - குற்றத்தையுடைய அரிய உயிரும்பிழைத்தலுற.
கூக. மயற்கு அண்ணாள். அயற்கண்ணாள் அலளாகி - வேறிடத்திலுள்ளாளல்லளாகி. செயலாகிய கள்ளை.
கூ௩. இரண்டுபொற்றாமரையும், கடம்பும். தாமம்-கொன்றை, மாலை; சடை-சடை, பின்னல்.
கூச. கண்ணவர்கள்-கருதுதலையுடையவர்கள்.
கூகூ. தரமோ - தகுதியோ.
க00. நாஅணி - நாவால் அலங்கரிக்கும். மாஅணியின் - மிக்கஅலங்காரத்தோடும்.

## திருமால் பூசித்தபடலம்,

உ. ஐய - அழகிய.
௩. வீரை - கடல்.
௫. குருஉச்சுடர் ஆலும்-நிறம்பொருந்திய ஒளிமிக்க.
சு. வன்னம் - எழுத்து.
கூ. செற்றம் - தணியாக்கோபம். குடந்தமுற்று - வணங்கி.
க0. பாணி-கை, மாந்தும்-உண்ட. யாலலோசன-நெற்றிக்கண்ண.
கக. பவனென்பது சிவபெருமான்திருநாமங்களுளொன்று. கழுது - பேய்.
க௨. மத்தம் - ஊமத்தை.
க௩. கண்ணல் - கருதுதல். உன்கழலன்றிக் கண்ணல் ஏதுமிலேன். பின்னுமிப்படியே கொள்க.
க௫. பின்னர் இஃது ஆற்றினான்.
கசு. சேய - சிவந்த. பதிட்டை - பிரதிஷ்டை. ஆவயின் - அவ்விடத்தே.
கஎ. வினைவிண்டுபோக. விண்டு-விஷ்ணு.
கஅ. பன்னம் - இலை. சொன்ன ஆடை - பீதாம்பரம்.
ககூ. கந்தம் - மணம்.
உஉ. சந்தம்-அழகு. கந்து-சங்கு,
உ௩. ஈத்து-கொடுத்து. கன்று பசுக்கன்று. கனி - விளாங்கனி.
உ௫. பின்னை - திருமகள்.
உசு. குணில் - குறுந்தடி.

## தலவிசேடப்படலம்.

க. பன்னிய-சொல்லிய. பருப்பதம் - ஸ்ரீசைலம்.
உ. மன்னரும் - யாவரும்.
௩. சாதரம - அச்சம்.
ச. மனை - மனைவி. களம் - குறம்.
அ. விளையுள் - விளைதல் - வெற்றி.

௰. ஈங்கள் தம்பெருமான். பங்கம் இன்று - குற்றமில்லீடல்.

௧௧. அருகுறு - குறையாத. திரு - செல்வம்.

௧௫. விராய - கலந்த. பூமேற்பனவன் - பிரமன்.

௧௬. இலம் - பழுது.

௨௦. தொக்க - கூடிய.

௨௨. அலரி - சூரியன். பன்னகம் - பாம்பு. நன்றா நன்மை.

௨௩. சொல் - புகழ்.

௨௫. புரைத்த - உயர்ந்த.

௨௬. பனிவருங்கண்ணர் - துளிக்கும் கண்ணர். பரவி - துதித்து.

௨௮. உம்பர் - தேவர்.

## பிழையும் திருத்தமும்.

| பக்கம். | பாடல். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|---|
| ௪௫ | ௫ | ௨ | தவர் | தவ |
| ௪௨ | ௨௦ | ௧ | பன்னரூம | பன்னரு |
| ௫௮ | ௨௧ | ௧ | கடந்தலை | கடன்றலை |
| ௫௧ | ௪௫ | ௨ | யழா | பேழா |